17.02.2017 அன்று நடைபெற்ற திருக்களர் ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளி ஆண்டுவிழா நிகழ்ச்சி.

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி - மாசி - 2017 - பிப்ரவரி



உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி - மாசி - 2017 - பிப்ரவரி இதழ் - 56

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

மலையரையன் பன்னகத்தன் மாதேவன்
மான்மழுதீ சுமந்த கையன்
மதுநதியில் ஆடுபவர் மயலறுக்கும்
மாசடைமேல் அரவு சுற்ற
மந்திரமாம் அஞ்செழுத்தை மனங்கொண்டார்
மனமிடமாய் மதிக்கும் தேவன்
கலையரசி நாவிருந்து கவிசொல்லக்
கற்றவர்கள் நெஞ்சு தேடிக்
காதலிப்பாள் நாவரசி அருகிருந்து
கந்தருவப் பண்கள் பாடக்
கண்டுருகி அருள்வழங்கு கவுமாரி
கழனிவாசல் நெல்லை அன்னை
நிலையரசு புரிகின்றாள் நித்தநித்தம்
நீங்காதாள் அடியர்க் காக
நின்றுதவு மாதேவி திரிசூலி
நிமலைபரா சக்தி என்னும்
நிர்மலப்பொன் வடிவி னாளை
நினைக்கின்ற நேசர் கூடித்
தலையாய தெய்வமெனக் கொண்டாடும்
தனிப்பெரிய கோவி லூரின்
தங்கமகள் நீயென்று தாள்வணங்கித்
தலைக்கொண்டோம் தாங்கிக் காக்கும்
தாயே என் தயவிருந்தால் என்னகுறை
தயவுவைத் தருளு வாயே

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

ஒவ்வொரு மனிதனுடைய உணர்ச்சி வெளிப்பாட்டிற்கும், அதன் மூலம் செய்யப்படுகின்ற செயல்பாட்டிற்கும் அவனுடைய நெஞ்சத்தில் உள்ள ஆசைகளின் அளவே முதற்காரணம் ஆகிறது. பக்குவப்பட்ட நல்ல குணங்கள் கொண்ட மனிதர்கள். தம்மை மற்றவர்கள் அவமதிக்கும் காலத்திலோ, வெறுப்பேற்ற முயலும் போதோ அவர்கள் கோபப்படுவதோ, பதற்றப்படுவதோ இல்லை. மாறாக மற்றவர்களைப் பொருட்படுத்தாமல் தம்முடைய காரியங்களைத் தொடர்ந்து செய்து முன்னேறுவார்கள். அந்தச் சூழ்நிலையிலே தன்னலம் மிக்கவர்கள், தான் என்கிற ஆணவத்திற்கு அடிமைப்படும் முறையிலே ஈடுபடுவார்கள்.

சுய நலம் அதிகமானாலும் இயல்பாகவே அவர்களுடைய எண்ணங்களாலும், செயல்பாடுகளினும் ஆசையும், கோபமும் அதிகமாகி அங்கே கண்டிப்பாக வன்முறைகள் அரங்கேறும். சுயநலமும், பேராசையும் பெருகிக் கொண்டே போனால் மனிதர்களை இயல்பாகவே பண்பற்றவர்களாகவும் வன்முறை -யாளர்களாகவும் மாற்றிவிடும்.

துரதிர்ஷ்டவசமாக இன்றைக்கு அரசியல்வாதிகள் அனைவரும் அளவற்ற சுயநலமும், பேராசையும் கொண்டு தாங்கள் இயல்பாகவே வன்முறையாளர்களாகவும், சமூகவிரோதச் செயல்களைச் செய்பவர்களாகவும் உள்ளார்கள். குறிப்பாக, தமிழக அரசியலிலே நல்லவர்களையும் கயவர்களாக மாற்றிவிடக் கூடிய சூழ்நிலைவெகுவாகவும் பரவியுள்ளது. மக்களைப் பற்றியோ, நாட்டைப் பற்றியோ கவலைப்படாமல் தம்மை வளப்படுத்திக்கொள்வதே நோக்கமாகக் கொண்டு இன்றைய அரசியல்வாதிகள் களத்தில் இறங்கியுள்ளார்கள்.

தம்முடைய வளங்களை, வாய்ப்புகளைக் காரணம் கொண்டு விட்டுத்தரத் தயாராக இல்லை. மாறாக எப்படியாகிலும் சரிஎவ்வழியாயினும் சரிஎனக்குப் பதவியும், பணமும் தான் தேவை என்கிறமனோபாவம் கொண்டவர்கள் வன்முறைகளை அரங்கேற்றி மக்களையும், நாட்டையும் கொஞ்சம் கொஞ்சமாகச் சிதைத்தும் பொருள் சேர்ப்பதிலேயே கவனமாக இருக்கிறார்கள். இப்படிப்பட்ட மிகையான சுயநலத்தாலும், பேராசையாலும் சமுதாயத்திற்கும் நாட்டிற்கும் கேடுவிளைவிக்கின்றவர்களே,அரசியல்வாதிகளாக உள்ளார்கள்.

இந்தச் சூழ்நிலைமாறி நேர்மையானவர்கள், தன்னலமற்றவர்கள், பொதுநலம் போற்றுபவர்கள், நாட்டிற்கு நலம்பயக்கும் செயல் வீரர்கள் பொதுவாழ்விற்கு வந்து மக்களுடைய உரிமைகளையும் நலனையும் காப்பாற்ற வேண்டும். இதற்கு எல்லாம்வல்ல இறைவன் அருள்புரிவாராக!

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

**(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)**

ஐம்பூதங்கள் எவை என்று நான் ஆராய முற்படுகின்றேன். இந்தப் பூமியோ நீரோ தீயோ காற்றோ என அறிவில்லாத நான் ஆராய்கின்றேன். ஆனால் நானா ஆராய்கின்றேன். இறையாகிய நீயல்லவா! என்னை இவ்வாறு ஆராயத் தூண்டுகின்றாய். அதாவது அனைத்தையும் இயக்குவது நீயே என்பது பட்டினத்தார் கருத்து.

*பாரோ நீரோ தீயோ வளியோ படர்வானோ*
*ஆரோ நான்என்று ஆய்வுறு கின்றேன் அறிவில்லேன்*
*பாரோ நீரோ தீயோ வளியோ படர்வானோ*
*ஆரோ நான்என்று ஆய்வுறு கின்றது நீயோ*

உன்னைத் தேடிக்காணாதவர் பலர். கண்டவர் சிலரே. இப்படித் தினமும் தேடிக் காண இயலாதவனே! திருவெண்காட்டில் உறைகின்றவனே! மத்தினால் கடையப் பெற்ற தயிரை உண்டதிருமாலும் மலர்மேல் இருக்கும் நான்முகனும் தேடிக்காணா நிமலனே! கயல்கள் பாய்கின்ற வயல்களை உடைய திருநாங்கூர்ச் சேந்தனே! அரசன் எனக்கிட்ட கைவிலங்கை நீக்கி உன்வடிவை என்முன் காட்டுக.

*மத்தளை தயிர்உண் டானும் மலர்மிசை மன்னினானும்*
*நித்தமும் தேடிக் காணா நிமலனே நீயின்றேகிச்*
*செய்த்தலை கயல்பாய் நாங்கூர்ச் சேந்தனை வேந்தனிட்ட*
*கைத்தளை நீக்கி என்முன் காட்டுவெண் காட்டுளானே.*

என்பது பாடல்.

அடுத்ததாகக் குடும்பம் கட்டுக்குள் இருக்க வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துகிறார். இன்றைய அரசு கேட்பதை அன்றே சொல்லியவர் பட்டினத்தார். நாக்குப் பிளந்து போம்படியாகப் பொய் கூறி ஒன்பான் செல்வங்களையும் தேடிப் பூமி வெளிக்கிளம்பி வருகின்ற புற்றீசல் போலப் பொல பொலவென்று கல கலவென்று புதல்வர்களைப் பெற்று அவற்றைக் காக்கின்ற வகையை அறியாமல் அவற்றைக் கைவிடவும் முடியாமல் இரண்டாகப் பிளந்து கிடக்கும் மரத்தின் நடுவில்

அடித்துள்ள ஆப்பினை அசைத்துப் பிடுங்கி அப்பிளவுக்குள் அகப்பட்டுக் கொண்ட குரங்கினைப் போல அகப்பட்டுக் கிடந்து உழல்கின்றீரே? ஐயோ இப்படி அகப்பட்டுக் கொண்டீரே. என்று வருந்துகின்றார். பாடல் இதோ!

*நாப்பிளக்கப் பொய்யுரைத்து நல்நிதியம் தேடி*
*நலன் ஒன்றும் அறியாத நாரியரைக் கூடிப்*
*பூப்பிளக்க வருகின்ற புற்றீசல் போலப்*
*பொலபொலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்*
*காப்பதற்கும் வகையறியீர் கைவிடவும் மாட்டீர்*
*கவர்பிளந்த மரத்துளையில் கால்நுழைத்துக் கொண்டே*
*ஆப்பதனை அசைத்துவிட்ட குரங்கதனைப் போல*
*அகப்பட்டீர் கிடந்துழல அகப்பட் டீரே.*

இப்படிப் பலவாறு உலகிலுள்ள நிலைகளைப் பட்டியலிட்டு வாழ்க்கைச் சோகங்களை வகுத்துக் காட்டிய பட்டினத்தார் பற்றைத் துறந்த பட்டினத்தார் தன் தாய் இறந்தபோது தாங்காது புலம்புகின்றார். அவற்றை நாம் நோக்கும் போது அவர் பாடிய பாடல் அவரது சோகத்தைக் காட்டும்.

என்னைப் பத்துத் திங்கள் வயிற்றில் சுமந்து உடல் வருந்தி வாடிப் பெற்றெடுத்து அக்குழந்தையாகிய எனக்கு ஏதேனும் துன்பமானது வந்தால் வருந்தாதே என்று அன்புடன் தூக்கி எடுத்து தன்னுடைய செங்கையால் ஏந்தி எனக்குப் பாலூட்டிய உன்னை நான் எப்படி மறப்பேன்

*ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்து பெற்றுப்*
*பையலென்ற போதே பரிந்தெடுத்துச் - செய்யஇரு*
*கைப்புறத்தில் ஏந்திக் கனகமுலை தந்தாளை*
*எப்பிறப்பில் காண்பேன் இனி*

பல நாள்களாக அதாவது முந்நூறு நாள்களாகத் தவமிருந்து அல்லும் பகலுமாய்ச் சிவனை வணங்கி அன்பு பாராட்டி, தன்வயிறு சரியச் சுமந்து பெற்ற தாயுடல் எரியும்படியாக நானா நெருப்பு மூட்டுவேன்.

*முந்தித் தவம்கிடந்து முந்நூறு நாள்சுமந்தே*
*அந்திப் பகலாய்ச் சிவனை ஆதரித்துத் - தொந்தி*
*சரியச் சுமந்துபெற்ற தாயார் தமக்கோ*
*எரியத் தழல்மூட்டு வேன்*

வட்டிலிலும் தொட்டிலிலும் மார்பின் மேலும் தோளின் மேலும் கட்டிலின் மேலும் அன்புடன் என்னைத் துயில வைத்துப் பக்கத்திலேயே இருத்திக் காப்பாற்றி எப்போதும் காப்பாற்றிய என் தாயை நான் விறகிலிட்டு எப்படித் தீ மூட்டுவேன்.

*வட்டிலிலும் தொட்டிலிலும் மார்மேலும் தோள்மேலும்*
*கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து - முட்டச்*
*சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டும் தாய்க்கோ*
*விறகிலிட்டுத் தீமூட்டுவேன்.*

என்னை வயிற்றிலே சுமந்து நொந்து பெற்று நான் வருத்தப்படா வண்ணம் என்னை ஏந்திப் பாலூட்டி அந்தியும் பகலுமாய் என்னைக் கையில் ஏந்திக் காத்த தாயின் உடலிலா நான் தீ முட்டுவேன்.

*நொந்து சுமந்துபெற்று நோவாமல் ஏந்திமுலை*
*தந்து வளர்த்தெடுத்துத் தாழாமே - அந்திபகல்*
*கையிலே கொண்டென்னைக் காப்பாற்றும் தாய்தனக்கோ*
*மெய்யிலே தீமூட்டு வேன்.*

என் தாய்க்கு வேண்டிய வரிசைகளைச் செய்யாமல் உருகிய. தேனே! அமுதமே செல்லமான திரவியப் பூ மானே! என்றழைத்த ஆத்தாளின் வாய்க்கு அரிசி நானா இடுவேன்?

*அரிசியோ நான்இடுவேன் ஆத்தாள் தனக்கு?*
*வரிசையிட்டுப் பார்த்து மகிழாமல் உருகியுள்ள*
*தேனே அமிர்தமே செல்வத் திரவியப்பூ*
*மானே என்றழைத்த வாய்க்கு.*

அள்ளி நான் இடுவது வாய்க்கரிசியோ? தாயிள் தலைமேல் கொள்ளியைக் கூசாமல் வைப்பேனோ? மெள்ள முகம்மேல் முகம் வைத்து முத்தம் தந்து என்னை மகனே என்றழைத்த வாய்க்கு எப்படி நான் அரிசியை இடுவேன்.

*அள்ளி இடுவது அரிசியோ? தாய்தலைமேல்*
*கொள்ளிதனை வைப்பேனோ கூசாமல் - மெள்ள*
*முகமேல் முகம்வைத்து முத்தாடி என்றன்*
*மகனேஎன் றழைத்த வாய்க்கு*

முன்னர் ஒருவனாகிய சிவன் முப்புரத்திலே தீ வைத்தான். பின்னர் ஒருவன் ஆகிய அனுமன் இட்ட தீ தென்னிலங்கையில். அன்னையோ தானிறந்து என் வயிற்றிலே நெருப்பை இட்டாள். ஆதலால் நான் அன்னையின்மேல் இட்ட தீ மூண்டெரியட்டும்.

*முன்னை இட்டதீ முப்புரத்திலே*
*பின்னை இட்டதீ தென்னிலங் கையிலே*
*அன்னை இட்டதீ அடிவயிற்றிலே*
*யானும் இட்டதீ மூள்க மூள்கவே*

என்மேல் வானத்துக் குருவி பறக்காமல் கோதாட்டி எனை வளர்த்திட்ட தாயின் கை தீயில் வேகுதே. வெந்து பொடி சாம்பல் ஆகுதே ஐயகோ?

*வேகுதே தீயதனில் வெந்துபொடி சாம்பல்*
*ஆகுதே பாவியேன் ஐயகோ - மாகக்*
*குருவி பறவாமல் கோதாட்டி என்னைக்*
*கருதி வளர்த்தெடுத்த கை.*

தினந்தோறும் உன்னையே நினைத்து உவகையோடு வரம் கிடந்து என்னை ஈன்றெடுத்த தாய் சோணகிரி என்னும் திருவண்ணாமலையிலுள்ள வித்தகா! என்னை மறந்து நின்பாதம் சேர்ந்தாளோ?

*வெந்தாளோ சோணகிரி வித்தகா? நின்பதத்தில்*
*வந்தாளோ? என்னை மறந்தாளோ? - சந்ததமும்*
*உன்னையே நோக்கி உகந்துவரம் கிடந்துஎன்*
*தன்னையே ஈன்றெடுத்த தாய்.*

என் அன்னை இங்குதான் வீற்றிருந்தாள். வீதியிலே இருந்தாள். நேற்று இங்குதான் இருந்தாள்; இன்று வெந்து சாம்பல் ஆனாள். ஆதலால் எல்லோரும் பால்தெளிக்க வாருங்கள். இரங்க வேண்டாம். எல்லாம் சிவமயமே.

*(தொடரும்....)*

# மாணிக்கவாசகரின் அச்சோப் பதிகம் அருளும் வாழ்வியல் நெறிகள்

(த.ரா. குருமூர்த்தி, பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர் (பொ), வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி)

மாணிக்கவாசகர் அருளிய திருவாசகத்தில் 51 பதிகங்கள் இருக்கின்றன. ஐம்பத்து ஓராவது பதிகம் அச்சோப் பதிகமாகும். எனது வாழ்வில் நிகழ்ந்த அதிசயம் என்பது போல இப்பதிகத்தை மாணிக்கவாசகர் நமக்குத் தந்துள்ளார். இறைவன் தந்த இச்சிறப்பினை யார் பெறுவார், நான் பெற்றிருக்கிறேன் இது அதிசயம் (அச்சோவே) ஒன்பது பாடல்களைக் கொண்ட பதிகமாக அச்சோப்பதிகம் இருக்கின்றது. மனிதனுக்குரிய வாழ்வியல் நெறிகளை ஒவ்வொரு பாடலும் உணர்த்துகின்றது. நல்ல குணங்கள் என்னிடம் இல்லை, எனக்கு நன்னெறி தோய்ந்த வாழ்விற்கான பாதையும், பயணமும் தெரியாது, அத்தனையும் எனக்கு இறைவன் அருளிச் செய்துள்ளான் என மாணிக்கவாசகர் இப்பதிகத்தில் தன்னைப் பதிவு செய்துள்ளார்.

*முக்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்*
*பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்*
*சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட*
*அத்தன் எனக்கு அருளியவாறார் பெறுவார் அச்சோவே.*

முத்திநெறி அறிந்து அதன்படி ஒழுகி வாழ்தல் வாழ்வியல் நெறியாகும். மூர்க்கரொடு சேரக்கூடாது. முத்திநெறி என்பது என்ன? இதனைத் திருமூலர் தமது திருமந்திரத்தில் 2506வது பாடலிலே விளக்கியுள்ளார். அப்பாடல் வரிகள் கீழே தரப்பட்டுள்ளன.

*முத்திக்கு வித்து முதல்வன்தன் ஞானமே*
*பத்திக்கு வித்து பணிந்துற்றுப் பற்றாலே*
*சித்திக்கு வித்துச் சிவபரம் தானாதல்*
*சத்திக்கு வித்து தனது உபசாந்தமே*

சத்தி, சித்தி, பத்தி என்கின்ற மூன்று நெறிகளைக் கடந்த பிறகு தான் முத்தி என்கிற வாழ்வியல் நெறியினை மனிதன் அடைய முடியும். சத்தி

நெறி என்பது சக்தி என்னும் அருளாற்றல் ஆகும். தனி மனிதன் தனது மனத்தை விருப்பு வெறுப்பு அற்ற நிலையில் வைத்திருப் பானேயாயின், அவனுக்குச் சக்தி என்னும் அருளாற்றல் கிட்டும். உபசாந்தம் என்பது விருப்பு, வெறுப்பு அற்ற நிலையில் இருத்தல் என்பது பொருளாகும்.

சத்தி என்கிற நிலைப்பாட்டில் இருந்தால், அடுத்த நிலையான சித்தி என்கிற உயர்வாழ்வு நெறியினை அடையலாம். சித்தி என்பதன் பொருள் சித்தத்தை அடக்கி அது தன்வசமாகச் செய்யும் குணமாகும். இக்குணத்தை அடைய சிவபெருமான் நினைவோடு சிவயோகத்தில் இருத்தல் வேண்டும். சித்தி என்கிற நிலைக்கு அடுத்துப் பத்தி என்கிற நிலை இருக்கின்றது. பரம்பொருளைப் பணிந்து இறைவன் நினைவை விடாது தொடர்ந்து பற்றியிருக்கும் நிலை பத்தி நிலை எனப்படும். சத்தி, சித்தி, பத்தி என்கிற மூன்று படிகளை ஏறிய பிறகு தான் முத்தி என்கிற நான்காவது படியை அடைய முடியும். இறைவன் திருவடிப் பேறு முத்தி என்பதாகும்.

முத்திநெறி அறிந்து வாழவேண்டும் என மாணிக்கவாசகர் அறிவுறுத்துகின்றார். முத்திக்கு வித்து சிவஞானம் எனத் திருமூலர் உணர்த்துகின்றார். திருநாவுக்கரசர் சிவகதி எனத்தெரிவிக்கின்றார். இதனைத் திருநாவுக்கரசர் தமது பாடலில், சிவகதி அடைவதற்கான பல்வேறு நற்பண்புகளை விளக்குகிறார்.

*மெய்ம்மையாம் உழவுசெய்து விருப்பெனும் வித்தைவித்தி*
*பொய்ம்மையாம் களைகள்வாங்கி, பொறையெனும் நீரைப்பாய்ச்சி,*
*தம்மையும் நோக்கிக்கண்டு தகவெனும் வேலியிட்டு*
*செம்மையுள் நிற்பராகில் சிவகதி விளையுமன்றே*

சத்தி, பத்தி, முத்தி ஆகிய மூன்று நிலைகளை வாழ்வியல் நெறியாக மாணிக்கவாசகர் குறிப்பிடுகின்றார். திருமூலர் சத்தி என்கிற அடிப்படை நிலையினையும் சேர்த்து நான்கு நிலைகளில் (சத்தி, சித்தி, பத்தி, முத்தி) வாழ்வியல் நெறியாகக் குறிப்பிடுகின்றார்.

நெறியல்லாதவற்றை நெறியாக நினைத்து வாழக்கூடாது. வையத்துள் வாழ்வாங்கு நெறியறிந்து வாழ வேண்டும். நெறியல்லா

நெறிதன்னை நெறியாக நினைவேனை என மாணிக்கவாசகர் தம்மைக் குறிப்பிட்டுக் கொள்கிறார். நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைப்போரும் இறையருளை நாடிச் சென்றால் இத்தீவினையிலிருந்து விலகமுடியும். அத்தகையோர்க்குச் சிறுநெறிகள் கூடச் சேராது திருவருள் கிட்டும் என இறையருளின் உன்னதப் பெருமையினை, சிவஞானத்தின் மேன்னையினை மாணிக்கவாசகர் அறிவுறுத்துகின்றார்.

மாணிக்கவாசகர் தமது கோவில் திருப்பதிகத்தில் முதலாவது பாடலில், மாறிநின்று என்னை மயக்கிடும் வஞ்சப் புலன்ஐந்தின் வழியடைத்து, அமுதே ஊறிநின்று, என் உள்எழு பரஞ்சோதி, உள்ளவர் காண வந்தருளாய் எனத் தெரிவிக்கினறார். மனிதனை மயக்கி நன்னெறியிலிருந்து பிறழ வைப்பவை ஐம்புலன்கள். இந்த ஐம்புலன்கள், தான் நினைத்த வழியில் செயல்படாது வழியினை அடைத்து அருள்வாயாக என மாணிக்கவாசகர் வேண்டுகின்றார். நெறியல்லா நெறி என்பது புலனடக்கம் இன்மை என்று அச்சோப் பதிகம் சொல்லித்தருகின்றது. புலனடக்கம் வேண்டும் என்பதனை வலியுறுத்துகின்றது. அறமே, வாழ்வியல் நெறியெனத் திருமூலர் தமது பாடலில் தெளிவுபடுத்துகின்றார்.

***தாமறிவார் அண்ணல்தாள் பணிவார் அவர்***
***தாமறிவார் அறம்தாங்கி நின்றார் அவர்***
***தாமறிவார் சிவதத்துவர் ஆவார்கள்***
***தாமறிவார்க்குத் தமர்பரன் ஆமே***

அறவழியில் வாழ்வது வாழ்வியல் நெறி. அறவழியில் வாழ்தல் என்றால் என்ன? மனம், வாக்கு, உடலால் எவருக்கும், எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாத அன்புள்ளம் கொண்டு வாழ்தல் என்பது அறவழி வாழ்வாகும். தம்மை அறிவது என்பது தான், தனது என்கிற நிலையிலிருந்து விலகி, மறந்து, தமக்குள் இருக்கும் பரம்பொருள் தன்மையை அறிவதாகும். அவ்வாறு தம்மை அறிந்தவர்கள் இறைவனின் திருவடியினை வணங்கியிருப்பர், அறவழியில் வாழ்வர், சிவமாக, சிவஞானம் உணர்ந்து, சிவதத்துவம் உணர்ந்திருப்பார்கள். இத்தகு சிறப்புப் பெற்றோர்க்கு இறைவனே உறவினர் ஆகி உடனிருப்பான்.

*பொய்யெல்லாம் மெய்யென்று புணர்முலையார் போகத்தே*
*மையலுறக் கடவேளை*
*பஞ்சுஆய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்பட்டு*
*நஞ்சு ஆய துயர்கூர நிற்பேன்*
*வெந்துவிழும் உடல் பிறவி மெய்யென்று வினைபெருக்கி,*
*கொந்து குழல் கோல்வளையார் குவிமுலைமேல் வீழ்வேனை,*
*தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனை*
*சாதல், பிறப்பு என்னும் தடம்சுழியில் தடுமாறி,*
*காதலின் மிக்கு அணிஇழையார் கலவியிலே விழுவேனை*
*செம்மைநலம் அறியாத சிதடரொடும் திரிவேனை*

எது பொய், எது மெய் என்பதை ஆராய்ந்து அறிதல் வேண்டும். பொய்யெல்லாம் மெய் என உணர்ந்து பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு விடக் கூடாது. இடர்ப்படின், நஞ்சு போன்ற துயர் வந்து சேரும். தையலார் மையலிலே வீழ்ந்துவிடக் கூடாது. இப்பிறவியில் நாம் கொண்டிருக்கும் உடல் பொய். உடலால் பெறும் வாழ்வு பொய், நிலையற்றது. உடலில் குடிகொண்டிருக்கும் ஆன்மா மெய். ஆன்மா நிலையானது. உடல் வீழ்ந்துவிடும். ஆன்மா வீழ்வதில்லை. இறந்தும் வாழ்பவர்கள், தம்மை உணர்ந்தவர்கள். ஆன்மாவை உணர்ந்தவர்கள். ஆன்மாவை உணர்ந்தவர்கள் இறந்தும் வாழ்பவர்கள்; உடல் மட்டும் இறந்துள்ளது. மரணமில்லாப் பெருவாழ்வு வாழ்ந்திடலாம் கண்டீர் என இராமலிங்க அடிகளார் தெளிவுபடுத்துகின்றார். பிறப்பு, இறப்பு என்னும் பெருந்துன்பத்தில் தடுமாறி, காதலின் மிகுதியால் தையலார் கலவியிலே வீழ்ந்து விடக்கூடாது.

துன்பங்கள் தொடரும். நல்வாழ்விற்கான பண்புகளை அறியாத அறிவிலிகளோடு சேரக்கூடாது. வாழ்வே கேள்விக் குறியாகிவிடும். எக்காலமும் உணர்ந்த இறைவனைத் தொழுதால் முக்காலமும், மும்மையிலும் நலம் கை கூடும். ஓம் என்கிற ஒலி முக்காலத்தையும் உணர்த்தும். அம்மை (வீடுபேறு). உம்மை (மறுமை), இம்மை (தற்போதைய பிறவி) மகாமந்திரமாகும். இந்த மும்மையிலும் எவ்விதத் துயரமும் இன்றி வாழ, இறையருள் துணை நிற்கும் என்பது

மாணிக்கவாசகரின் அருளுரையாகும். மாணிக்கவாசகர் தமது பாடல்களில் தம்மைக் கீழ்நிலையில் உள்ளவராகவும், பல்வேறு வாழ்வியல் குறைகளைக் கொண்டவராகவும், இக்குறைகளை எல்லாம் இறையருள் தீர்த்து வைத்து, சிவஞானத்தை அளித்ததாகவும் தெரிவிக்கின்றார். அச்சோப் பதிகத்தில் சொல்லப்படும் வாழ்வியல் குறைகளை மாணிக்கவாசகர் கொண்டிருந்தார் என யாரும் படித்ததாகப் படிகள் இல்லை. மனித வாழ்வின் குறைகளைச் சுட்டிக்காட்ட மாணிக்கவாசகர் தம்மை முன்னிறுத்தி, மனித வாழ்வு சிறக்க இறையருளின் அருளமுதத்தினை நமக்கு உணர்த்துகின்றார். வாழ்வியல் நெறிகளை வடிவமைத்துத் தந்து, மனிதவாழ்வு மரணமில்லாப் பெருவாழ்வாய் அமையத் திருவாசகத்தேனைத் தந்தருளியுள்ளார்.

*திருச்சிற்றம்பலம்*

# அதிமதுரக் கவிகள்

**காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர் நா. மீனவன்**

இப்படியாகத் தன் திறமைகளைப் பலவாறு வெளிப்படுத்திய காளமேகப் புலவரின் புலமையைத் தம்செருக்கினால் மதியாதிருந்த தண்டிகைப் புலவர்கள் பேரிலும் மன்னன் திருமலைராயன் பேரிலும் சினங்கொண்ட காளமேகம் திருமலைராயன் பட்டினத்தின் மேல் மண்மாரி பொழியச் செய்தார். இனி அவர்பால் தண்டிகைப் புலவர்கள் கேட்ட குறிப்புக்களையும் அதற்குக் காளமேகம் இறுத்த விடைகளையும் இனித் தொடர்ந்து காணலாம்.

**அரிகண்டமும் எமகண்டமும்**

அதிமதுர கவிராயர் காளமேகத்தை நோக்கி அரிகண்டம் பாடி உம்மால் எம்மை வெற்றிகொள்ள இயலுமா? அப்படியாயின் போட்டிக்கு எழுக! என்றதும் காளமேகம் அவரை நோக்கி அரி கண்டம் பற்றிக் கூறி அதன் முறைகளையும் விளக்கிக் கூறினால் நாம் நம்முடைய இசைவைத் தெரிவிப்பேன் என்றார்.

உடனே அதிமதுரம் காளமேகத்தை நோக்கிக் கழுத்திலே கத்திகளைக் கட்டிக் கொள்ள வேண்டும். நாங்கள் கேட்கும் குறிப்புகள்

அனைத்திற்கும் தக்கபடி பொருத்தமாக நீர் பாடலை விரைவாகச் சொல்ல வேண்டும். பொருட்குற்றமோ சொற்குற்றமோ இலக்கணக் குற்றமோ ஏற்பட்டால் கழுத்து வெட்டப் பெறும். நீர் அரிகண்டம் பாடி வெற்றி பெற்றால் பாராட்டப் பெறுவீர் என்றார்.

இதைக் கேட்ட காளமேகம் மிரண்டு போவார் என்று கருதிய அதிமதுரகவியை நோக்கிய காளமேகம் அரிகண்டம் பாடுவது ஒரு பெரிதான செயல் அன்று. எமகண்டமே பாடி எம்மால் வெல்ல முடியும் எள்றதும் திடுக்குற்ற அதிமதுரகவி எமகண்டமா? அதைப் பற்றி விளக்குவீர் என்றான்.

**எமகண்டம் பற்றிய காளமேகத்தின் விளக்கம்**

பதினாறடி ஆழம் பதினாறடி அகலம் பதினாறடி உயரம் உள்ள குழி ஒன்றைப் பூமியிலே தோண்ட வேண்டும். குழியின் நான்கு மூலைகளிலும் பதினாறடி உயரமுள்ள நான்கு இரும்புக் கம்பங்களை நாற்புறமும் நாட்டி மேலே குறுக்குச் சட்டங்களை நாட்டி அதிலிருந்து இரும்புச் சங்கிலிகளாலான உறி ஒன்று தொங்க விடப்பட வேண்டும்.

அக்குழியின் கீழ் பெரிய புளியங்கட்டைகளால் நிரப்ப வேண்டும். அதன் நடுவிலே ஓர் எண்ணெய்க் கொப்பரையை வைத்து அதனுள் அரக்கு, குங்கிலியம், மெழுகு போன்ற பொருள்களால் நிரப்ப வேண்டும். கொதிக்கும் எண்ணெய்க் கொப்பரைக்கு மேலுள்ளதாகிய உறியில் ஏறிப் போட்டியிடுபவர் அமர்ந்து கொள்வார்.

உயர்ந்த இரும்பினால் ஆகிய நன்கு தீட்டிக் கூர்மையாக்கப் பெற்ற எட்டுக் கத்திகளைச் சங்கிலியிற் கோத்து உறியிலிருப்பவரின் கழுத்தில் நான்கும் இடையில் நான்குமாகக் கட்டிக் கொள்வார். குழியின் நான்கு மூலைகளிலும் நடப்பட்டுள்ள கம்பங்களின் அருகில் நிறுத்தப் பெற்றுள்ள யானைகளின் துதிக்கைகளில் அந்தச் சங்கிலிகளைப் பிணைத்து விட வேண்டும்.

பிறகு புலவர்கள் கொடுக்கும் குறிப்புக்களுக்கு ஏற்ப உறியின்கண் இருப்பவர் அரை நொடி அளவிற்குள்ளாகப் பொருத்தமான செய்யுள்களை இயற்றிச் சொல்ல வேண்டும். அப்படிக் கூறாவிடில் அச்சங்கிலிகளை யானைகளால் இழுக்கச் செய்தால் கழுத்தும் இடையும் துண்டிக்கப் பெற்று

எண்ணெய்க் கொப்பரையில் வீழ்த்தப் பெறும். இதுவே எமகண்டம் என்பது. இதனை நீர் பாடுவீரோ? என்றார் காளமேகம்.

இதுகேட்ட அதிமதுரகவி நடுநடுங்கி எமகண்டம் பாடும் முறையை அறிந்து இதில் நாம் மாட்டிக் கொள்ளாமல் இவரை மாட்டிவிட எண்ணிக் காளமேகத்தை நோக்கி எம்மைப் பாடுவீரா? எனக் கேட்கும் நீர் இதனைச் செய்யவல்லீரோ? எனக் கேட்க அது எம்மால் இயலும் என விடையிறுத்தார் காளமேகம். அவ்வாறே போட்டி தொடங்கிற்று.

திருமலைராயன் அவையைச் சார்ந்த அதிமதுரமும் தண்டிகைப் புலவர்களும் தமக்குத் தோன்றியபடி எல்லாம் வாய்க்கு வந்தபடி கேட்கத் தொடங்கினர். அதற்கெல்லாம் விரைவாகப் பாடினார் காளமேகம். இனி, தண்டிகைப் புலவர்கள் கேட்ட குறிப் புக்களைப் பற்றியும் அவற்றிற்குக் காளமேகம் பாடிய செய்யுள் களையும் இனிக் காணலாம்.

**நீறும் நெருப்பும்**

ஒரு புலவர் காளமேகத்தை நோக்கி நீறாவாய் நெருப்பாவாய் கூறாவாய் கொளுத்துவாய் நட்டமாவாய் என்ற பொருள் படச் சிவபெருமானைப் பற்றி ஒரு செய்யுள் சொல்க என்றார். அப்புலவர் கொடுத்த குறிப்புக்களைக் கொண்டு சிவபெருமானை வணங்குவது போல் பாடினார். அப்பாடல்

*நீறாவாய் நெற்றி நெருப்பாவாய் அங்கமிரு*
*கூறாவாய் மேனி கொளுத்துவாய் - மாறாத*
*நட்டமா வாய்சோறு நஞ்சாவாய் நாயேனை*
*இட்டமாய்க் காப்பாய் இனி.*

நெற்றியிலே திருநீற்றை உடையவன் ஆவாய். திருமேனி நெருப்பாக அமைந்தவன் நீ. உமைக்கு உடலில் பாதி கொடுத்தமையால் நீ இரண்டு கூறாக உடல் அமையப் பெற்றுள்ளாய். நெருப்பாகிக் காமனைக் கொளுத்துவாய்; இடைவிடாது நடனமாடுவாய். நஞ்சினையே சோறாகக் கொள்பவன் நீ. இப்படிப்பட்ட நீ இந்த அடியவனை விருப்பமுடன் காக்க வேண்டும். இதுவே இதன் பொருள்.

**குடத்திலே கங்கை அடங்கும்**

அடுத்து ஒரு புலவரிடம் இருந்து வினாப் புறப்பட்டது. அவர் காளமேகத்தை நோக்கிக் கங்கை என்ற பெரியநதியாகிய கங்கை ஒரு சிறிய குடத்திலே அடங்கும் என்ற பொருள்பட ஒருவெண் பாவினை இயற்றுக! என்றார். உடனே மறுவினாடியே காளமேகம்

*விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்*
*மண்ணுக் கடங்காமல் வந்தாலும் - பெண்ணை*
*இடத்திலே வைத்த இறைவர் சடாம*
*குடத்திலே கங்கை அடங்கும்*

என்று பாடி முடித்தார்.

ஆகாய கங்கை பகீரதன் தவத்துக்காகப் பூமியிலே இறங்கிய புராணக்கதையை மனங்கொண்டு அவ்வாறு இறங்கிய கங்கை வானத்திடத்தே அடங்காமலும் இமயமலைக்கு அடங்காமலும் கீழே வரும்போது பூமிக்கு அடங்காமலும் பெருகி வந்த போது அவளைத் தாங்கும் பொருட்டு வந்த உமையை இடப்பாகத்திலே கொண்ட சிவபெருமானின் விரிந்த சடைநோக்கிப் பாய அக்கங்கையை அப்படியே சடாமகுடத்தில் அடக்கினார். சடா-மகுடம் என்பது வெண்பா இலக்கணத்திற்கு ஏற்பச் சடாமகுடம் என்று ஆனது.

**ஆறுதலையும் மாறுதலையும்**

அடுத்து எழுந்த ஒருபுலவர் காளமேகத்தை நோக்கிச் சிவன் முருகன் விநாயகர் திருமால் சிவனடியார் ஆகியோர்க்குத் தனித் தனியாக ஆறுதலைகள் என்ற பொருளில் ஒரு வெண்பாப் பாடுக என்று கேட்டதும் காளமேகம்

*சங்கரற்கு மாறுதலை சண்முகற்கு மாறுதலை*
*ஐங்கரற்கு மாறுதலை யானதே - சங்கைப்*
*பிடித்தோர்க்கு மாறுதலை பித்தா! நின்பாதம்*
*படித்தோர்க்கு மாறுதலை பார்.*

என்று பாடினார்.

சங்கரன் என்ற திருநாமம் கொண்ட சிவனுக்குக் கங்கை ஆறு தலையில் உள்ளது. சண்முகப் பெருமானுக்கோ ஆறு தலைகள்

உள்ளன. ஐங்கரன் ஆகிய விநாயகனுக்கு மனிதத் தலையில்லாமல் மாறுபட்ட யானைத் தலையாக உள்ளது. சங்கைக் கையில் ஏந்திய திருமால் பொன்னி ஆற்றின் கலையில் இருக்கிறான். பித்தனாகிய பரமசிவனே! என்போதும் சிவனடியார்க்கு நீ தருவது ஆறுதலை என்ற பொருளில் பாடினார்.

### சிவனுக்கு அரைக்கண்

அடுத்ததாக எழுந்த ஒரு புலவர் காளமேகத்தை நோக்கிச் சிவனுக்கு அரைக்கண் என்று பாடுக என்றார். காளமேகம் இது கண்டு கலங்கவில்லை. உடனே அவர் வாயிலிருந்து ஒரு வெண்பா விரைந்து வெளிப்பட்டது.

*முக்கண்ணன் என்(று) அரனை முன்னோர் மொழிந்திடுவர்*
*அக்கண்ணற்(கு) உள்ள(து) அரைக்கண்ணே - மிக்க*
*உமையாள்கண் ஒன்றரைமற் றூன்வேடன் கண்ணொன்(று)*
*அமையும் இதனால் என்(று) அறி*

என்று பாடினார்.

சிவபெருமான் மூன்றுகண் பெற்றவன் ஆதலால் முக்கண்ணன் என்றழைப்பர். அக்குமாலை எனப்படும் உருத்திராக்க மாலை அணிந்த சிவனுக்கு உள்ளது அரைக்கண்ணே. எப்படி! எனில் மேலான உமையவள் சிவனின் உடலில் பாதி பெற்றவள் என்பதால் அவளுக்கு உரிமையுடைய கண் ஒன்றரை ஆகிறது. பின் உன் வேடனாகிய கண்ணப்பன் அப்பிய கண் ஒன்று. இதனால் சிவனுக்கு அரைக்கண்ணே என்பதை அறிந்து கொள்க.

### சிதம்பர தேவா

அடுத்து ஒரு புலவர் சிதம்பரம் தேவா என்ற சொல் நான்கு முறை சரப்பாடுக என்றதும் அதற்கும் ஒரு வெண்பாவை விடையாக்கினார் காளமேகம்.

*அரகர திருச்சிற்றம்பல வாணாஅந்*
*தரரூ பமகே சசிதம் - பரதே*
*வசிதம் பரதே வசிதம் பரதே*
*வசிதம் பரதே வனே.*

என்பதே அந்த வெண்பா.

அரகரா! திருச்சிற்றம்பலத்தை உடைய பரமனே! ஆகாய வடிவமாளவனே! மகேசுவரா! சிதாகாயத்து (பரவெளி) உள்ள பெருமானே! சிதம்பர தேவா! சிதம்பர தேவா! சிதம்பர தேவா! சிதம்பர தேவனே! என்பது இதன் பொருள்.

**கின்னரி வாசிக்கும் கிளி**

அடுத்த கவிராயர் எழுந்தார். கின்னரி வாசிக்கும் கிளி என்ற சொல் ஈற்றடியாக அமைய ஒரு வெண்பாக் கூறுக! தயங்கவில்லை காளமேகம். இதோ அந்த வெண்பா.

***ஆடல்புரிந் தான்என்றும் அந்நாளி லேமூவர்***
***பாடல்உகந் தான்என்னும் பான்மையினால் - கூடலிலே***
***நன்னரி வாசிக்கு நடைபயிற்றி னான்என்றும்***
***கின்னரி வாசிக்கும் கிளி.***

என்பதே அப்பாடல்.

சிவபெருமான் அந்நாளில் திருவிளையாடல் பல செய்தவன் என்றும் தேவாரம் பாடிய மூவரின் பாடல்களைக் கேட்டு மகிழ்ந் தவன் என்றும் அவனே நல்ல நரிகளைக் குதிரைகளாக்கி அவற்றிற்கு நடை பயிற்றினான் என்றும் இவை நடந்தது மதுரையிலே என்றும் கிளி கின்னரி வாசிக்கும் என்பது பொருள். கின்னரி என் பது வீணை வகைசார்ந்த இசைக்கருவிகளுள் ஒன்று.

**நா நீ நு நே**

அடுத்து எழுந்த ஒரு புலவர் நா நீ நு நே என்ற எழுத்துக்களை அமைத்தும் பொருட்செறிவுடன் ஒரு வெண்பாப் பாடுக! என்றார். யோசிக்கவில்லை காளமேகம். விரைவாக வெண்பா ஒன்று புறப்பட்டது அவரிடமிருந்து.

***அரையின் முடியில் அணிமார்பின் நெஞ்சில்***
***தெரிவை இடத்(து) அமர்ந்தான் சேர்வை - புரையறவே***
***மானார் விழியீர் மரைணஒற்(று) ஈறாகும்***
***ஆனால்நா நீநூ நே***

என்பது வெண்பா.

*(தொடரும்....)*

# மடாலய நிகழ்வுகள்

## கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியில் விளையாட்டு விழா

நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியின் எட்டாவது ஆண்டு விளையாட்டு விழா 25.01.2017 அன்று நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் விளையாட்டுப் போட்டிகளைத் தொடங்கி வைத்தார். கல்லூரி முதல்வர் மாயாண்டி வரவேற்றார். உடற்கல்வி இயக்குநர் சசிக்குமார் ஆண்டறிக்கை வாசித்தார். முன்னாள் காவல்துறை துணை ஆணையர் ஏ.ஆர். சுப்புராமன் ஐ.பி.எஸ் மற்றும் ஆசிய விளையாட்டுப் போட்டி மற்றும் உலக அளவிலான பல போட்டிகளில் சாம்பியன்பட்டம் வென்ற சைக்கிள் தடகள வீரர். ஏ.ஆர் வாசுதேவன் ஆகியோர் விளையாட்டுப் போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகளை வழங்கினர். மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் வாழ்த்துரை வழங்கினார். மடலாய கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் டாக்டர் ரவீந்திரன், டாக்டர். செல்லப்பா, திருமதி மணிமொழி மோகன், திருமதி. மணிமொழிமுருகன் கலந்து கொண்டனர்.

26.01.2017 அன்று கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்கள் இணைந்து குடியரசு தினவிழாவைக் கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி மைதானத்தில் கொண்டாடின. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்ற விழாவில் காரைக்குடி கம்பன் கழகச் செயலர் கம்பன் அடிசூடி பழனியப்பன் தேசியக் கொடியை ஏற்றி வைத்துக் குடியரசு தினவிழா உரை ஆற்றினார். கலைக்கல்லூரி முதல்வர் டாக்டர் செல்லப்பா வரவேற்றார். உடற்பயிற்சிக் கல்லூரி முதல்வர் டாக்டர். ரவீந்திரன் நன்றி கூறினார். மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் முதல்வர்கள் மணிமொழிமோகன், மணிமொழிமுருகன் மற்றும் மாணவர்கள், ஆசிரியர்கள் திரளாகப் பங்குபெற்றனர்.

## கோவிலூர் மடாலய பள்ளிகளில் ஆண்டுவிழா

27.01.2017 அன்று கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி ஆண்டுவிழா கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. துணை முதல்வர் வள்ளியம்மை வரவேற்றார். முதல்வர் மணிமொழி மோகன் ஆண்டறிக்கை வாசித்தார். பள்ளத்தூர் சீதாலட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரி முதல்வர் ராமுத்தாய் விழா உரை ஆற்றிப் பரிசுகளை வழங்கினார். ஆசிரியை ஆர்.பிரியா நன்றி கூறினார். பெற்றோர்கள் ஆசிரியர்கள் பெருமளவில் பங்கேற்றனர்.

28.01.2017 அன்று கோவிலூர் முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் தொடக்கப்பள்ளி ஆண்டுவிழா நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் ஆசிஉரை வழங்கினார். ஆசிரியை கௌரி வரவேற்றார். முதல்வர் மணிமொழி முருகன் ஆண்டறிக்கை வாசித்தார். கோட்டையூர் தஞ்சாவூர் அருணாசலம் செட்டியார் மேல்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் சண்முகவேல் முருகன் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு பரிசுகள் வழங்கினார். ஆசிரியை ரோசலின் மேரி நன்றி கூறினார்.

கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன், மடாலயக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் டாக்டர் செல்லப்பா, டாக்டர் ரவீந்திரன், மாயாண்டி, மணிமொழி முருகன் மற்றும் பெற்றோர்கள் கலந்து கொண்டனர்.

## கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியில் புதிய பணிமனை திறப்புவிழா

09.02.2017 அன்று கோவிலூரில் உள்ள நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியில் புதிய பொறியியல் பணிமனை கட்டப்பெற்றது. தற்போது இப்புதிய பொறியியல் பணிமனையினைக் கோவிலூர் ஆதீனம் குத்துவிளக்கேற்றி இயந்திரங்களை இயக்கித் தொடங்கிவைத்தார். டாக்டர். குமரப்பன், முதல்வர். மாயாண்டி, ரோசிரியர்கள், மாணவர்கள் கலந்து கொண்டனர்.

## பாலிடெக்னிக்கல்லூரி ஆண்டுவிழா

10.02.2017 அன்று கோவிலூரில் உள்ள நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியில் ஆண்டுவிழா நடைபெற்றது. பேரா.சண்முகநாதன் வரவேற்றார். கல்லூரி முதல்வர் மாயாண்டி ஆண்டறிக்கை வாசித்தார். கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் ஆசியுரை வழங்கினார். காரைக்குடி பொதுப்பணித்துறை உதவி செயற்பொறியாளர் பரமசிவம் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு பரிசுகளை வழங்கினார். கோவிலூர் மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் வாழ்த்துரை வழங்கினார். அலுவலக மேலாளர் கண்ணன் நன்றி கூறினார். பின்னர் மாணவ மாணவியரின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

## கல்லூரி விளையாட்டு விழா

11.02.2017 அன்று கோவிலூரில் உள்ள நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் விளையாட்டு விழா கல்லூரி முதல்வர் டாக்டர் செல்லப்பா தலைமையில் நடைபெற்றது. பேரா. கலா வரவேற்றார். கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் விளையாட்டுப் போட்டிகளைத் தொடங்கி வைத்தார். உடற்கல்வி இயக்குநர் ரமேஷ் விளையாட்டுத்துறை அறிக்கையினை வாசித்தார். கல்லல் முருகப்பா மேல்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் அலெக்சாண்டர் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு பரிசுகளை வழங்கினார். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் வாழ்த்துரை வழங்கினார். பேரா. சீதாலட்சுமி நன்றி கூறினார். பேரா. கார்மேகம் நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கினார். முதல்வர்கள் டாக்டர். ரவீந்திரன், திருமதி மணிமொழிமோகன், திருமதி மணிமொழிமுருகன் கலந்து கொண்டனர்.

## நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியில் வளாகத்தேர்வு

04.02.2017 அன்று கோவிலூரில் நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியில் இறுதியாண்டு பயிலும் மாணவர்களுக்கு வேலை வாய்ப்பிற்கான வளாகத் தேர்வு கல்லூரி முதல்வர் மாயாண்டி

தலைமையில் நடைபெற்றது. சென்னையில் மோட்டார் உதிரி பாகங்கள் தயாரிப்பில் முன்னிலையில் உள்ள வீடா இன்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட் மற்றும் என்.எஸ்.கே ஆடொமேடிவ் ஆகிய சென்னை நிறுவனங்கள் வளாகத் தேர்வை நடத்தின. வீடா இன்டஸ்ட்ரீஸ் நிறுவனத்தின் மனிதவள மேம்பாட்டு அலுவலர் அருணாசலம் வளாகத் தேர்வை நடத்தி 28 மாணவர்களைத் தேர்வு செய்தார். என்.எஸ்.கே. ஆட்டோமேடிவ் நிறுவனத்தின் மனிதவள மேம்பாட்டு அலுவலர் வி.ஜி.மோகன்ராஜ் வளாகத்தேர்வை நடத்தி 18 மாணவர்களைத் தேர்வு செய்தார்.

வளாகத் தேர்வில் தேர்வு செய்யப்பெற்ற 46 இறுதியாண்டு மாணவர்களுக்குப் பணி ஆணையினைக் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் வழங்கினார்கள். பணி நியமன ஆணை பெற்ற மாணவர்களைக் கோவிலூர் மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர்.குமரப்பன் வாழ்த்தினார். இயந்திரவியல் துறைத்தலைவர் கதிர்வேல் வேலைவாய்ப்பு அலுவலர் வீரபாண்டி ஆகியோர் வளாகத் தேர்வுக்கான ஏற்பாடுகளைச் செய்திருந்தனர்.

### நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி கணினித் தொழில் நுட்பம் சார்ந்த Intellect'17 விழா

கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில், கல்லூரிகளுக்கு இடையேயான கணினித் தொழில் நுட்பம் சார்ந்த இன்டலக்ட் (Intellect'17) விழா நடைபெற்றது. விழாவில் கல்லூரியின் முதல்வர் டாக்டர். பா.செல்லப்பா தலைமையுரை ஆற்றினார். கணினியியல் துறைத் தலைவர் முனைவர். கலா வரவேற்புரை ஆற்றினார். விழாவிற்கு அழகப்பா பல்கலைக்கழகக் கணினியியல் துறைத் தலைவர் முனைவர் ராமராஜ் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு கணினி தொழில் நுட்பம் பற்றி உரையாற்றினார்.

கணினி மென்பொருள் புரோக்ராம் பிழை நீக்குதல் (Debugging) அசைப்படும் (Animation) ஆய்வுக் கட்டுரை சமர்ப்பித்தல் (Paper Presentation) பொருட்களை விளம்பரப்படுத்துதல் (Ad.Act) கலை நிகழ்ச்சிகள் (As you like it) என ஐந்து பிரிவுகளில் போட்டிகள் நடைபெற்றன. பதினைந்து கல்லூரிகளைச் சார்ந்த நூற்றுக்கும்

மேற்பட்ட மாணவ மாணவியர் இவ்விழாவில் பங்கு பெற்றனர். ஒவ்வொரு போட்டியிலும் முதல் மூன்று இடங்களைப் பெற்றவர்களுக்குப் பரிசுகளும், புள்ளிகள் அடிப்படையில் கல்லூரிக்கான சாம்பியன் பட்டமும் கோப்பையும் வழுங்கப் பெற்றன. பங்கு பெற்ற அனைவருக்கும் சான்றிதழ் வழங்கப் பெற்றது. விழாவில் கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் ஆசியுடன் கோவிலூர் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் முனைவர். குமரப்பன் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகளை வழங்கிச் சிறப்பித்தார்.

பூவந்தியிலுள்ள மதுரை சிவகாசி நாடார் பயோனியர் மகளிர் கல்லூரி, ஒட்டு மொத்த சாம்பியன் பட்டத்தை வென்று சுழற் கோப்பையைக் கைப்பற்றியது. இவ்விழாவினைக் கணினியியல் துறை உதவிப் பேராசிரியர்கள் திருமதி. கார்த்திகா, திரு. ஜெயராஜ், திருமதி. ஈஸ்வரி மற்றும் திருமதி. இந்துமதி மற்றும் மாணவ மாணவியர் சிறப்பாக ஏற்பாடு செய்து இருந்தனர். நிறைவாக உதவிப் பேராசிரியை செல்வராணி நன்றி கூறினார்.

29.1.2017 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் தண்டி அடிகள், சோமாசி நாயனார், மூர்க்க நாயனார் ஆகிய நாயன்மார்கள் குறித்து ஆசிரியர் பழ. பாஸ்கர் சொற்பொழிவாற்றினார்.

கோவிலூர் மடாலயத்தின் நிர்வாகத்திற்குட்பட்ட திருக்களர் கோ.ஆ.வீர. மடாலயத்தோடு இணைந்து இயங்கும் திருக்களர் ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப் பள்ளிக்கு 7.2.2017 அன்று தமிழக அரசின் ஒப்புதல் ஆணை வழங்கப் பெற்றுள்ளது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். (மூ.மு.எண் 996 / 2017 /4 நாள் : 7.2.2017)

மேற்கண்டபள்ளியின் இரண்டாம் ஆண்டு (2016 - 17) பள்ளி ஆண்டு விழாவும், விளையாட்டு விழாவும் 17.2.17 அன்று மிகச்சிறப்பாக நடைபெற்றன. சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகளின் தலைமையில் நடைபெற்ற விழாக்களில் திருவாரூர் மாவட்ட கூட்டுறவு வங்கியின் முன்னாள் தலைவர் திரு. பாரிஜாத

கண்டப்பிள்ளை, பள்ளியின் தாளாளர் திரு. R.இராமலிங்கம் மற்றும் கோ.ஆ.வீர. மடாலயத்தின் மேலாளர் திரு. கருப்பஞ் செட்டியார் ஆகியோர் முன்னிலை வகித்தனர். ஓய்வு பெற்ற தலைமை ஆசிரியர் புலவர் திரு. மனத்துணைநாதன் வாழ்த்துரை வழங்கினார். திருக்களர் காவல்துறை ஆய்வாளர் திரு. ஜோதி முத்துராமலிங்கம் மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கிச் சிறப்புரை ஆற்றினார்.

## பட்டினத்தார் பைந்தமிழ் - 4

**தமிழாகரர் தெ. முருகசாமி**

**(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)**

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு எனத் துறவுக்குரிய இலக்கணத்தைக் கூறும் திருவள்ளுவர் பற்றில்லாத இறைவனைப் பற்றிக் கொள்ளுதலே பிற பற்றை விடுதற்கான வழி என்றார். இந்த அடிப்படையில் எல்லாவற்றையும் துறந்த பட்டினத்தார் இறைப் பற்றை விடாதவராய் வாழ்ந்ததை ஆவணப்படுத்தும் விதமாகக் கீழ்வரும் பாடலைப் பாடுகின்றார்.

***இலவிதழ்வாய் வீழ்வார் இகழ்வார் அவர்தம்***
***கலவி கடைக்கணித்தும் காணேன்! - இலங்குமொளி***
***ஆடகம்சேர் அம்பலத்தே ஆளுடையார் நின்றாடும்***
***நாடகம்கண்(டு) அன்பான நான்.***

ஒளிமயமாய் விளங்கும் பொன்னம்பலத்தில் உயிர்க் கூட்டங்களை ஆளும் ஈசன் ஆடும் ஆட்டங் கண்ட (பட்டினத்தாராகிய) நான் சிற்றின்பம் நுகர்ந்து வாழும் கூட்டத்தினரைக் கடைக்கணித்தும் பாரேன் என உறுதி கூறுகிறார் பட்டினத்தார்.

இப்பாடல் குறிக்கும் ஆளுடையார் என்பது ஆன்மாக்களை ஆளாக உடைய தலைவர் என்ற பொருளுடையது. அனைத்து உயிர்க் கூட்டங்களும் இரவில் வந்து ஒடுங்கி மறுநாள் காலை புறப்பட்டு ஆங்காங்கே சஞ்சரித்து மாலை 5 மணியளவில் திருவாரூரில் தியாகேசனைத் தரிசித்துவிட்டுத் தில்லையில் வந்து தங்கும் என்பது ஒரு சாத்திரக் குறிப்பு. அந்த உண்மைக்கு ஏற்பவே திருவாரூரில்

மாலைக்கால பூசை (சாயரட்சை) மாலை 5 மணிக்கு நடைபெறும். குறிப்பாக அனைத்தும் ஒடுங்குவது தில்லை என்பதால் அந்தச் சாத்திர உண்மையில் குறிப்பையே பட்டினத்தார் அம்பலத்தே ஆளுடையார் என்றார்.

இப்பாடல் ஓர் அரிய அற்புதப் பாடல். நான்முகனும் நாராயணனும் போற்றித் துதிக்குமாறு தில்லையில் கூத்தாடும் பேரின்பத்தேன் போன்றவனாகிய சிவபெருமான் எனது தீமைகளை எல்லாம் அழித்துத் தானே வந்து என் உள்ளம் புகுந்ததால் அவனை நான் சந்திக்க நேர்ந்தது என வியப்படைகின்றார் பட்டினத்தார். இந்தச் சந்திப்பால் பிறப்பதன் பயனை அடைந்தேன் பெருமான் தானே விரும்பி நான் வேண்டாத போது வந்து என் மனத்துள் புகுந்தது என்பது அதிசயம் என்பதாகும்.

அதிசயம் என்பது வேறு; அற்புதம் என்பது வேறு. சாத்தியப்படாத ஒன்று தானே வந்து சாத்தியப் படுவது அதிசயம். அது கன்றீனும் பசு. புலிக்குட்டியை ஈன்றது போலத் தான் விரும்பாமலே உள்ளம் புகுந்தது ஆண்டவன் அருள்பாலித்தது ஆகும். அதாவது எப்பொழுதும் இல்லாமல் எப்போதோ நடப்பதான செயல்தான் அதிசயம்.

அடுத்து சாத்தியப்படாத ஒன்று திடீரென வெளிப்பட்டால் அது அற்புதம். அது போல இப்பாடலில் திருமுடியையும் திருவடியையும் தேடிக்காண முடியாத அயனும் அரியும் தில்லையில் கண்டார்கள் என்பது அற்புதம். இது பேச முடியாதென்ற ஊமை பயிற்சியால் பேச முற்பட்டதைப் போன்றதாகும். இங்ஙனம் அதிசயமே அற்புதமும் கலந்த நிலையில் பட்டினத்தார் தில்லைக் கூத்தனை அனுபவிக்கின்றார். அதிலும் அற்புதத்திலும் அதிசயமே விஞ்சுமாறு பாடலில் சொற்கள் பரிமாறப்பட்டுள்ளன.

அன்னமாய்ப் பன்றியாய் உழன்ற அயனும் அரியும் தில்லையில் தூக்கிய திருவடியையும் உயர்ந்த வெள்ளந்தாழ் விரிசடையையும் ஒரு சேரவே இருவரும் இரண்டையும் பார்த்து வணங்கிக் கூத்தனை எம் தலைவரெனப் போற்றியது அற்புதமானாலும் யாதொரு வேண்டுதலும் இல்லாமல் அதாவது திருமுடியையும் திருவடியையும் காண வேண்டும்

என்ற அறைகூவலின்படி இல்லாமல் இருக்க, பட்டினத்தாரின் உள்ளத்தில் வந்து உவந்து தங்கினான் என்பது அதிசயம் தானே! இதனையே வேறு வகையாகவும் கூறலாம். தேவார மூவர்க்கும் தானே வந்து அருள் செய்யாத ஈசன்மாணிக்க வாசகருக்குத் தானே வந்துள்ளம் புகுந்து அடியேற்கருள் செய்தான் என்றபடி பட்டினத்தார்க்கும் தானே புகுந்து எனப்பட்டது. இந்த அதிசயத்தின் உச்சத்தைத் தானே புகுந்தடியேன் என்பதால் உணரலாம்.

சந்தித்தல் என்பது எளிமையாகச் சந்தித்ததாகாது. அச்சந்திப்பு அரிதினும் அரிதானது ஆகும். இந்தச் சந்திப்புக்காக ஏங்கியவர் உண்டு. அருணகிரி நாதர் கந்தரலங்காரத்தில் சிந்திக்கிலேன் சேவிக்கிலேன் என்ற பாடலில் மயில் வாகனனைச் சந்திக்கிலேன்னுபவம் என்று கதறுகிறார். ஆனால் பட்டினத்தார் அங்ஙனமாக ஏங்காத நிலையிலேயே தில்லைக் கூத்தன் மனத்திடை வந்து சந்தித்தான் என்றால் மாணிக்க வாசகரின் போன்றது பட்டினத்தாரின் அனுபவம் என்றால் அதிசயம் அன்றோ.

இப்படியாகத் தில்லைக் கூத்தனாகிய தலைவன் பட்டினத்தாராகிய தலைவியை மயக்கியதால் அந்த மயக்கத்தோடே இருப்பதைப் பட்டினத்தார் தம்மை ஒரு பெண்ணாகப் பாவித்துக் கொண்டு 11ஆம் பாடலைப் பாடுகின்றார். இப்பாடல் காதல் வயப்பட்ட ஒருத்தியடையும் துன்ப நிலையைத் தோழி கூறுவதாய் அமைந்த அகப்பாடலாகும்.

காதலித்த ஆடவனைப் பற்றிப் பெற்றோர்க்குத் தெரியாததால் தன் மகளுக்கு மாப்பிள்ளை பார்த்து மணம் முடிக்க ஏற்பாடாகும் போது அவ்வேற் பாட்டைத் தலைவியின் தோழி தடுத்துக் கூறும் நிலையை அறத்தொடு நிற்றல் என்பர். அந்த முறைப்படி பிறைமதி தாங்கித் தில்லையில் ஆடும் கூத்துகந்தானை வணங்கியது தொட்டுவேறு சிந்தனையின்றி இருப்பதால் என் தலைவி வழக்கத்திற்கு மாறாக இருக்கிறாள். இம்மாற்றம் மாற வேண்டு மானால் தில்லைக் கூத்தனான இவனிடம் சேர்ப்பிக்க வேண்டும் எனத் தோழி தலைவியின் பெற்றோருக்கு அறிவுறுத்தினாள். இதனால் தன்னை மறந்து தில்லைக் கூத்தனிடம் பட்டினத்தார் இலயித்த பக்தியை உணர முடிகிறது.

*(தொடரும்....)*

# திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

## அடக்கம் உடைமை

***மனம், மொழி, மெய்களால் அடக்கம் உடைமை***

**1. அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை**
**ஆர்இருள் உய்த்து விடும்.**

அடக்கம் - மனம் மொழி மெய்களால் அடங்கியிருத்தல் ; அமரருள் உய்க்கும் - தேவர்கள் என்னும் நிலைக்குச் வெலுத்தும் ; அடங்காமை - அடங்காதிருப்பது ; ஆர்இருள் - இருள் உலகில் ; உய்த்து விடும் - சேர்த்துவிடும்.

மனம், மொழி, மெய்களால் அடங்கி இருத்தல் தேவர்கள் என்னும் நிலைக்கு ஒருவரைச் செலுத்தும் ; அடங்காமலிருப்பது அறியாமையாகிய இருள் உலகில் உய்த்துவிடும்.

**2. காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்**
**அதனின் ஊங்கு இல்லை உயிர்க்கு.**

காக்க பொருளா அடக்கத்தை - அடக்கத்தை மிகச் சிறந்த பொருளாகக் கருதிக் காக்க ; ஆக்கம் - செல்வம்; உயிர்க்கு - உயிர்களாகிய மக்களுக்கு; அதனின் ஊங்கு இல்லை - அதனைவிடச் சிறந்தது இல்லை.

உயிர்களாகிய மக்களுக்கு அடக்கத்தைவிடச் சிறந்த செல்வம் இல்லை ; எனவே அடக்கத்தைச் சிறந்த பொருளாகக் கருதிக் காக்க வேண்டும்.

**3. செறிவு அறிந்து சீர்மை பயக்கும் அறிவுஅறிந்து**
**ஆற்றின் அடங்கப் பெறின்.**

செறிவு அறிந்து - அடக்கம் உடைமையின் பெருமை அறிந்து ; சீர்மை பயக்கும் - சிறப்பினைக் கொடுக்கும் ; அறிவு அறிந்து - அறிவினால் அடக்கம் உடைமையின் திறனறிந்து; ஆற்றின் - முறைமையால்; அடங்கப் பெறின் - அடங்குதல் ஆனால்.

அடக்கம் உடைமையின் திறனறிந்து முறைமையால் அடங்குதல் உண்டானால் அதன் பெருமை அறிந்து அவருக்குச் சிறப்புக் கிடைக்கும்.

**4. நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்**
**மலையினும் மாணப் பெரிது.**

நிலையின் திரியாது - நடுவு நிலைமை என்னும் நிலையிலிருந்து மாறுபடாமல்; அடங்கியான் - அடக்கமுடையவனுடைய ; தோற்றம் - உயர்வு ; மலையினும் - மலையைவிட ; மாணப் பெரிது - மிகவும் உயர்வானது ஆகும்.

நடுவு நிலைமை என்னும் நிலையிலிருந்து மாறுபடாமல் அடக்கமுடையவனாய் உள்ளவனின் உயர்வு மலையைவிட உயர்வானது ஆகும்.

**5. எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்**
**செல்வர்க்கே செல்வம் தகைத்து.**

பணிதல் எல்லார்க்கும் நன்றாம் - அடங்கி நடத்தல் என்பது அனைவருக்கும் நன்றாகும். அவருள்ளும் - அவருக்குள்ளும் ; செல்வர்க்கே - செல்வம் உடையவர்களுக்கு ; செல்வம் தகைத்து - இன்னும் ஒரு செல்வம் அமைந்தது என்னும் தகுதியை உடையது.

அடங்கி நடத்தல் அனைவருக்கும் நன்றாகும் ; அவருள்ளேயும் செல்வம் உடையவர்களின் அடக்கம் இன்னும் ஒரு செல்வம் அமைந்தது என்னும் தகுதியை உடையது.

**6. ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்**
**எழுமையும் ஏமாப்பு உடைத்து.**

ஒருமையுள் - ஒரு பிறவியின்கண்; ஆமைபோல் - ஆமை தன் உடம்பை அடக்கிக் கொள்வதுபோல ; ஐந்தடக்கல் ஆற்றின் - ஐந்து பொறிகளையும் அடக்கிட முடியுமானால் ; எழுமையும் ஏமாப்பு உடைத்து - ஏழுபிறவிகளிலும் பாதுகாப்பினை உடையது.

ஒருவன் ஒரு பிறவியில் தன்னுடைய ஐந்து பொறிகளையும் ஆமையைப் போல அடக்கிவாழ முடியுமானால் அவனுடைய ஏழு பிறவிகளிலும் அந்த அடக்கம் அவனுக்குப் பாதுகாப்பினைத் தரும்.

**7. யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்**
**சோகாப்பர் சொல்இழுக்குப் பட்டு.**

யா காவாராயினும் - காக்க வேண்டியவற்றுள் எவற்றைக் காக்க முடியாவிட்டாலும்; நாகாக்க - நாவினை மட்டுமாவது காக்க வேண்டும்; காவாக்கால் - நாவைக் காக்காவிட்டால்; சோகாப்பர் சொல்இழுக்குப் பட்டு - சொல்குற்றம் ஏற்பட்டுத் துன்பம் அடைவர்.

ஒருவர் காக்க வேண்டியவற்றுள் எவற்றைக் காக்க முடியாவிட்டாலும் நாவினை மட்டுமாவது காக்க வேண்டும்; நாவைக் காவாவிட்டால் சொல் குற்றம் ஏற்பட்டுத் துன்பம் அடைவர்.

**8. ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்**
**நன்று ஆகாது ஆகிவிடும்.**

ஒன்றானும் - துன்பம் ஒன்றானாலும் ; தீச்சொல் பொருட்பயன் உண்டாயின் - தீய சொல்லின் பயனால் ; நன்று ஆகாது ஆகிவிடும் - நன்மை ஏற்படாமல் தீங்காக மாறிவிடும்.

ஒருவர் சொல்லும் தீயசொல்லால் ஏற்படும் துன்பம் ஒன்றானாலும் அதனால் நன்மை ஏற்படாமல் அதுவே தீங்காக மாறிவிடும். எனவே நாவை அடக்க வேண்டும்.

**9. தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே**
**நாவினால் சுட்ட வடு.**

தீயினால் சுட்டபுண் - தீயினால் சுட்டபுண் ; உள்ளாறும் - மனதினால் ஆறிவிடும் : ஆறாதே நாவினாற் சுட்டவடு - நாவால் சொன்ன சுடுசொல்லாகிய வடு ஆறவே மாட்டாது.

தீயினால் சுட்டு ஏற்பட்ட புண் மனதளவில் ஆறிவிடும் ; ஆனால் நாவால் சொன்ன சுடுசொல் ஆறவே மாட்டாது.

**10. கதம்காத்துக் கற்றுஅடங்கல் ஆற்றுவான் செவ்வி**
**அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.**

கதம்காத்து - கோபத்தைக் கட்டுப் படுத்தி ; கற்று அடங்கல் - கல்வி உடையவனாயும் அடக்க முடையவனாயும் அமைதல் ; ஆற்றுவான் செவ்வி - வல்லவனின் சிறப்பினை ; அறம் பார்க்கும் - அறக்கடவுள் பார்க்கும் ; ஆற்றின் நுழைந்து - அவனை அடையும் வழி அறிந்து சென்று.

கோபத்தைக் கட்டுப்படுத்தி, கல்வியும் அடக்கமும் உடையவனாய் அமைதல் வல்லவனின் சிறப்பினை அறிந்து அவனை அடையும்வழியில் சென்று அறக்கடவுள் அவனைப் பார்க்கும்.

*(தொடரும்...)*

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**